சுயராஜ்ய பேரிகை, மலர்—3 (புதிய பதிப்பு)

நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம்!!

ஸ்ரீ

# எல்லைப்புற காந்தி

அல்லது

# அப்துல் கபூர்கான்



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்
எழுதியது

1417

உ

சுயராஜ்ய பேரிகை, மலர் 3

நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம்!!

ஸ்ரீ

# எல்லைப்புற காந்தி

அல்லது

# அப்துல் கபூர்கான்

## 1. முன்னுரை

உலக சரிதத்தில் மிகவும் உயர்வுடையது நமது பாரத தேசம். தொன்றுதொட்டு இன்றுவரை, இப்பூமியின் பெருமை மிக அதிகம். உலகினுக்கே தாயகமாய், ஞான நாயகமாய் அன்றுபோல் இன்றும், பாரத பூமி துலங்கா நிற்கும். இந்நாளில் ஐரோப்பிய மக்களே நாகரிகத்தில் நனி சிறந்தோர் என்று சொல்லப்படுகின்றனர். அந்த மக்களின் தற்கால நிலைமை யாது? அன்னார் ஒருவரையொருவர் விழுங்கப் பார்க்கின்றனர்; இன்றேல் நசுக்க நாட்டம் கொள்கின்றனர்; பல்வகைப் படைகள் சேர்க்கின்றனர்; இரை தேடித்திரியும் கழுகினைப்போல், இப்பாருலகிலே நாற்றிசையும் நோக்கிச் சென்று நாடு பிடிக்கின்றனர்.

சில ஆண்டுகளுக்கு முன்பு, ஐரோப்பிய மகாயுத்தம் நடந்தது. அப்போது, அப்பப்பா! ஐரோப்பா எங்கும் இரத்த ஆறு ஓடிற்று; மானிடரின் தலைகள் உருண்டன; கோடிக் கணக்கில் மக்கள் வெட்டி மடிந்தனர்; வீழ்ந்து புலம்பினர். அப்பால், சண்டையே கூடாது, சாந்தியே நிலைநிற்கவேண்டும் எனும் உணர்ச்சி அவர்களுக்கு உதித்

தது. ஆயினும், அவ்வுணர்ச்சி ஒரு விநாடிக்குமேல் நிலை நிற்கவில்லை. ஒருவருக்கு ஒருவர் உள்ளூர மனக்கொதிப்பும் கசப்பும், பிணக்கும் பகையும், அச்சமும் ஐயமும் கொண்டுளர். மானிடராவோர் கேவலம் மிருகப்பிராயமாக மூர்க்கங் கொள்ளுதல் கண்டு, நமது பாரத பூமி சகிக்கவில்லை; ஆதலின் ஒப்பற்ற ஒரு புருஷன்மூலம் உபதேசம் புரிய முற்பட்டுள்ளது; தர்மமே ஜயம். சத்தியமே சரதம், சாந்தியே நிச்சயம், அன்பே அரண், அருளே உயிர் என்று போதம் புகட்டுகின்றது; உள்ளிருக்கும் ஆன்ம சக்தியை, தெய்வபலத்தைத் தட்டி எழுப்புகின்றது. இத்தகைய ஞானோபதேசத்தின் வடிவமாகத் திகழ்வோன் மோகன தாஸ் கரம் சந்த்ர காந்தி எனும் மகா புருஷன். அப்பெருமான் ஒருவனாய், உலகேத்த நிற்கின்றான்; உயரிய போதம் புகல்கின்றான். ஐரோப்பியரும் அமெரிக்கரும், எகிப்தியரும் இத்தாலியரும் அம்மகானைத் தரிசிக்க ஆவல்கொண்டு இங்கே வந்து போகின்றனர்.

உலகின் அவல நிலைகண்டு, ஊராரின் உன்மத்தங் கண்டு, ஒரு காந்தி போதாதது, மற்றுமோர் காந்தி தேவை என நம் பாரதத்தாய் பரிவுமிகக் கொண்டனள். ஆதலின் "எல்லைப்புற காந்தி" எனும் மகா சாந்த புருஷனொருவன் தோன்றியுள்ளான். அப்பெருமான் ஆஜானுபாகு; செல்வச் சீமான்; பிஷாவர் நகரவாசி; பட்டாணியரின் தெய்வம்; எண்ணிறந்த சீடர் கொண்டோன். அப்புருஷன் வாக்கே தெய்வவாக்கு என்று பட்டாணிய மக்கள் மதித்துளர். ஆண்சிங்கமே போன்ற அம்மக்களைச் சாந்த வடிவாகச் சமைத்த பெருமை நமது "எல்லைப்புற காந்தி"க்கே உரியதாம். அந்த ஐயன் தரிப்பது கதர் ஆடை; தலையில் அணிவது காந்தி குல்லாய், நாவிலிருந்து கொட்டுவது நற்போதம், மெய்ஞ்ஞானம். அப்பெருமான் சரிதை இங்கே சுருங்கவும் விளங்கவும் பேசப்படும்.

விவேகானந்த புத்தகசாலை
ஹிந்து மதாபிமான சங்கம்

## 2. கா[illegible]க் கோட்டை வாயில்

ஆதியிலே பாரதபூமியை ஐம்பத்தாறு தேசங்களாக வகுத்திருந்தனர். அவற்றில் ஒன்று காந்தாரம். மாபாரதக் கதாநாயகன் பெயர் துரியோதனன். அத்துரியனது மாமன் சகுனி. சகுனி என்பான் வெகு சிறப்பாக அத்தேசத்தை ஆண்டுவந்தான். மற்றொன்று கிராத தேசம். அந்த இரண்டு தேசங்களும் இச்சமயம் வடமேற்கு எல்லைப்புற மாகாணம் எனப்படும். அங்கே மலைகளும் குன்றுகளும், பள்ளத்தாக்குகளும் மைதானங்களும் அதிகம். மக்களில் பலரும் மலைக்குகைகளில் வசிக்கும் இயல்புடையோர். நிலத்தின் இயல்புக்கு ஏற்பப் பயிர் செழிக்கும். மக்களும் அப்படியே. மக்கள் அனைவரும் மகா பலசாலிகள்; மனவலியும் மிகப் படைத்தோர், பரம வீரமும் தீரமும் அவர்களின் இயற்கை நலங்கள். கோபமும் ரோஷமும் அவர்களுக்கு மிகுதி. வாளுருவிப் பகைமுடித்தலும், ஆயுதங்கொண்டு வைரியை வீழ்த்தலும், அவர்களுக்கு மிகவும் ஸகஜம். உயிர் அவர்களுக்கு ஒரு பொருட்டன்று, வீரமும் மானமுமே அவர்களுக்கு விழுமி யனவாம்

ஆதிமுதல் சமீபகாலம் வரையில் அம் மாகாணமே பாரத பூமியின் கோட்டைவாசல் போன்று இருந்தது. இன்றும் 'ஓரளவு அப்படித்தான். கடந்த ஐந்தாயிரம் ஆண்டுகளில் அவ்வாயிலின் வழியே நமது பூமியில் புகுந்தோர் எண்ணிலர்; படைகொண்டு வந்தோரும் கணக்கிலர்; கிரேக்க வீரவேந்தனும் மகா அலேக்சாந்தர் என்பான் அவ்வழியேதான் படைகொண்டு வந்தான்; பஞ்சாபு தேசத்தில் பெரும்போர் நிகழ்த்தினன். பின்னர் சாகர், ஹூணர், முகம்மதியர் முதலியோர், கொள்ளையை நாடி, இங்கே தண்டு கொண்டுவந்தனர். வந்தோர் பலரும் இங்கே நிலையாக அரசுகொள்ள இயலவில்லை; முகம்

மதியரைத் தவிர மற்றையோரில் பலரும் பாரத மக்களுடன் மக்களாய்க் கலந்துவிட்டனர். முகம்மதியர் மட்டும் நெடுநாள் அரசுகொண்டு, பின்னால் இங்கே தனிவகுப்பினராகி, முடிவில் சோதரராகத் தங்கியுளர்.

எல்லைப்புற மக்களோ அங்ஙனம் புகுந்த ஒவ்வொருவருடனும் மல்லுக்கு நின்றனர்; மண்டமர் புரிந்தனர்; மாவீரங் காட்டினர்; மகிமையும் கொண்டனர். எனவே ஐயாயிரம் ஆண்டுகளாக அந்த எல்லைப்புற மக்கள் ஓயாமல் ஒழியாமல் சமர்முறுக்கியே நிற்க நேர்ந்துளது. அதனால் அன்னவரிடம் போர்க்குணமும் பேராண்மையும் படிதல் இயற்கை அல்லவா? இயற்கை நிலையும் செயற்கை நிலைகளும் சேர்ந்து, அம்மக்களை வீரபுருஷராக ஆக்கின. படைவீரரும் வெற்றி வேந்தரும் அவ்வழியே வந்துபோயினும், ஒருவரும் அப்பிரதேசத்தில் நிலையாக ஆட்சிசெய்ய இயலவில்லை. அம்மக்கள் சுதந்திர புருஷர்களாகத் துலங்க, நாடோ சுயேச்சை நாடாகவே இருந்துவருகின்றது.

தற்சமயம் இத்தேசத்தைக் கட்டியாளும் ஆங்கிலத்தார் அம்மக்களை அடக்கி வசஞ்செய்ய நால்வகை உபாயங்களையும் கையாளுகின்றனர்; கோடிக்கணக்கில் பணத்தைச் செலவிடுகின்றனர்; பதினாயிரக்கணக்கில் படைகளை நிறுத்தியிருக்கின்றனர். எனினும் அங்கே நிலையான ஆட்சியையோ, அமைதியையோ, ஏற்படுத்த ஆங்கிலரால் ஆகவில்லை. எல்லைப்புறமக்கள் என்று கேட்டால், எந்த ஆங்கில வீரனும் தளகர்த்தனும் திடுக்கிடுவான்; பரபரப்பும் கொள்வான். அத்தகைய ஆண்மக்களை அன்புவழியில், அஹிம்ஸை நெறியில், சாந்த மார்க்கத்தில் நம்பிக்கை கொள்ளும் வண்ணம் செய்திருக்கும் சிறப்புக்கு எல்லைப்புற காந்தியே பாத்திரம் ஆவார். அவர் பெயர் கான் அப்துல் கபூர் கான். கபூர் என்றால் கதிமோட்சம் தேடித் தருவோன் என்று அர்த்தம்.

# 3. பிள்ளைப் பருவம்

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் உதுமான்ஸா என்னும் கிராமம் ஒன்றுண்டு. அஃது ஒரு குக்கிராமம். 1891-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் கான் அப்துல் கபூர் கான் அக்கிராமத்தில் பிறந்தார். அப்போது எல்லைப்புற மக்களுக்கும் இந்தியாவின் அரசாங்கத்தினுக்கும் கடும் போர் நடந்து கொண்டிருந்தது. அம்மக்களை அடக்கி வசஞ்செய்ய வேண்டும் என்பதே ஆங்கிலேயரின் கருத்து.

இத்தகைய காலத்தில் நமது கபூர்கான் பிறந்தார். அவர் குடும்பம் பரம்பரையாகப் பெருமை கொண்டது. அக் குடும்பத்தினருக்கு, "கான்" எனும் பட்டப்பெயர் உண்டு. நமது கிராமங்களில் நாட்டாண்மைக்காரன், கிராமணி, பெரியதனக்காரன் எனும் பட்டப் பெயர்கள் உண்டு அல்லவா? அவைபோன்றதுதான் கான் என்பது. அவரது தந்தையோ மிக்க மதிப்பும் தக்க செல்வாக்கும் வாய்ந்தவர். தமது பையனை அவர் ஓர் ஆரம்பப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பினர். அப்புதல்வன் புத்தி கூர்மை கொண்டு பாடங்களைப் படித்து வந்தான். அப்பால் ஆங்கிலக் கல்வி கொடுக்க ஏற்பாடு ஆயிற்று. எல்லைப்புற மக்களில் பலர் அந்நாள் ஆங்கிலப் படிப்பில் அவ்வளவு சிரத்தை கொள்ளவில்லை. உயர் குடும்பத்தினரில் சிலரே ஆங்கிலக் கல்வியில் ஆர்வம் கொண்டிருந்தனர். நமது கபூர்கானும் அவரது சோதரரும் ஆங்கிலக்கல்வி பயின்றனர். உதுமான்ஸா எனும் கிராமத்தில் முதன் முதல் ஆங்கிலக் கல்வி கற்றோர் அவ்விரு சோதரருமே. விளையும் பயிர் முளையிலே தெரியும். கபூர்கானது நடையும் நொடியும், படிப்பும் பான்மையும் கண்டு, கிராமத்தார் வியந்தனர்; ஆசிரியர்களோ ஆச்சரியம் அடைந்தார்கள். கலா சாலையில் சேருவதற்குரிய படிப்பு நிரம்பியது.

யந்திர சாஸ்திரப்பயிற்சியில் மகனைத் தேர்ச்சி பெறச் செய்ய தந்தை விரும்பினர். அதற்கிணங்க, 1906-ஆம் ஆண்டில் அவரை இங்கிலாந்துக்கு அனுப்ப ஏற்பாடு ஆயிற்று. நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்பது பழமொழி. குடும்பத்திலே எதிர்பாராத ஆபத்தொன்று நேர்ந்தது. அதனுல், கபூர்கான் இங்கிலாந்து செல்ல முடியவில்லை. எனினும், பின்னுளிலே அவர் பெரும் பதவி பெறுவார் என்று பலரும் எண்ணியிருந்தனர்.

பிறப்பு ஒக்கும் எல்லா உயிரும் என்றார் திருவள்ளுவர். செய்தொழிலின் வேற்றுமையினுல் சிறப்புஒவ்வாது என்பது உண்மையே. இதனை கபூர்கான் நன்கு உணர்ந்தவர். உடல் நிறம் காரணமாக ஏற்றத்தாழ்வு காட்டப்படின், அதனை யாரே சகிப்பார்? 1909-ஆம் ஆண்டிலே இந்தியச் சேனையில் நமது கானுக்கு ஒரு தலைமைப் பதவி கொடுக்க அதிகாரிகள் இசைந்தார்கள். அஃது ஓர் அரிய பதவியே; அப்பதவி பெற்ற பாக்கியவான்கள் அந்நாளில் வெகு சிலர்தாம். ஆயினும், பதவிக்குரிய மனிதர்களைத் தேர்ந்து எடுப்பதில், ஏற்றத்தாழ்வு காட்டப்பட்டது அது கண்டு அவர் அப்பதவியை உதறித் தள்ளினர்; அரசாங்கத்தில் ஊழியம் புரிவது இல்லை என்றும் அன்றே தீர்மானம் கொண்டார்.

## 4. தேச சேவை

ஆபிரிக்கா கண்டத்திலே திரிபோலி என்னும் நாடு உளது; அந்நாட்டு மக்களில் பலரும் முஸல்மான்கள். அவர்கள் துருக்கியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தனர். ஐரோப்பிய மக்களிலே சிலர் திரிபோலியின் மீது கண் வைத்தனர். அவ்விதம் கண் வைத்தோரில் ஒருவர் இத்தாலியர். அது காரணமாக இத்தாலிக்கும் துருக்கிக்கும்

போர் மூண்டது. கமால் பாட்சா என்பார் துருக்கியின் தளபதியாக நின்று, இத்தாலியருடன் சமர் புரிந்தார். யுத்தம் நெடுநாள் நடந்தது. திரிபோலி நாட்டிலிருந்து இத்தாலியரை ஓட்டி விட வேண்டும் என்பதே கமால் பாட்சாவின் கருத்து.

அப்போது, கான் அப்துல் கபூர் கானுக்கு வயது இருபத்தொன்று. தமது இனத்தினரும் மதத்தினரு மான துருக்கியர் படும் பாட்டை அவர் கண்டார்; அன்ன வரின் பங்கில் நியாயம் உண்டு என்பதையும் நன்கு உணர்ந்தார். உடனே உதவி புரியவேண்டும் என்று அவ ருக்கு ஆவல் பிறந்தது. போரில் பணமும் படையுமே பிரதானம். ஆதலின், கபூர்கான் தமது பிரதேசத்தி லிருந்து பெரும் பணம் திரட்டி அனுப்பினர்; துருக்கியின் பக்கம் நின்று போர் புரிய ஒரு படையும் அனுப்பினர். அதுமுதல் தேசசேவையில் அவருக்கு நாட்டம்சென்றது.

உடனே 1913-ஆம் ஆண்டில் அவர் தமது கிராமத் திலே தேசீய பாடசாலை ஒன்று ஏற்படுத்தினர். பல பிள்ளை கள் அக்கழகத்தில் குழுமி, மார்க்கக் கல்வியும் பொதுக் கல்வியும் பெற்றனர். கிராம வாசிகளுக்கு அவர்மீது அன் பும் பிரியமும் உதித்தன. அவருடைய செல்வாக்கு அதி கரித்து வந்தது. அதுகண்டு அதிகாரிகளுக்குப் பிடிக்க வில்லை போலும்; 1914-ஆம் ஆண்டிலே ஐரோப்பிய மகா யுத்தம் மூண்டது அல்லவா? அப்போது ருஷியாவைக் கண்டு அரசாங்கம் அஞ்சிக் கிடந்தது. எல்லைப்புறத்தின் வழியே பகைஞர் வரக்கூடுமோ என்ற பீதியும்அரசாங்கத் துக்கு உதிக்கலாயிற்று. அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பர். எல்லைப்புற மக்களை யும் அன்னரின் தலைவரான சிலரையும் கண்டு அதிகாரிகள் அஞ்சி அடக்குமுறைகளைக் கையாளலானர்கள். அதனல் 1915-ஆம் ஆண்டிலே, அத்தேசீய பாடசாலை பலவந்த

மாக மூடப்பட்டது; அதற்கு ஆண்டுதோறும் அதிகாரிகள் கொடுத்து வந்த சகாய திரவியம் நிறுத்தப்பட்டது; பல ஆசிரியர்களும் ஹக்கீம்களும் சிறையில் போடப்பட்டனர். அத்தகைய அடக்குமுறையில் சிக்காமல் கபூர்கான் தப்பியது ஆண்டவன் செய்த சகாயமேயாம்.

## 5. பரநல வேலை

அநீதமான அடக்குமுறை கண்டு யாரே மனம் சகிப்பர்? கபூர் கானுக்கோ உள்ளம் பொங்கிற்று; உடல் துடித்தது. ஆங்கில ஆட்சிமுறையின் போக்கைக் கண்டு அவருக்கு அதிக சலிப்பு உண்டாயிற்று. உள்ள நிலையை ஊராருக்கு உணர்த்த வேண்டும் என்று அவர் துணிவு கொண்டார். உடனே அன்னியரின் ஆதிக்கத்தை அறவே ஒழிக்கவேண்டும் என்று அவர் முனையலானார். ஆனது பற்றி அவர் ஊர் ஊராகச்சென்றார்; ஆங்காங்கு பிரசங்க மாரி பொழிந்தார்; ராஜீய நிலையை எவரும் எளிதில் உணரும் வண்ணம் எடுத்துரைத்தார். பொது நலத்தில் நாட்டம் உடையோன்ஏழைகளிடம் இரக்கம்காட்டுவான்,பரிவு கொள்வான். கபூர்கானே ஏழைகளுக்கு இரங்கி, இனிமை பல புரியலானார். அதனால் மக்கள் பலரும் அவரை உச்சி மீது கொண்டு கொண்டாடினர்; மாதா பிதாவும் அவன், மன்னு குரு தெய்வம் அவன், தாதா அவனே, தருங்கீர்த்திக்கு ஆதாரன், என்று அவரைப் பலரும் போற்றினர்.

ஐரோப்பிய மகா யுத்த சமயத்தில் இந்தியாதேசம் செய்த உதவியோ ஏட்டில் அடங்காது; நமது தேசம் கோடிக் கணக்கில் பணத்தைக் கொட்டிக் கொடுத்தது; இலட்சக்கணக்கில் வீரரை அனுப்பித் தலை கொடுத்தது; பண்டமாகவும் பலவகைப் பொருளாகவும் கப்பல் கப்பலாக அனுப்பிவந்தது. அது காரணமாக இத்தேசத்திலே பஞ்சநிலைமை தோன்றிற்று. மக்களில் பலர் பசியால் வாடி

னர். ராஜீயக் கொள்ளைகளும் நடக்கலாயின. சுதந்திர தாகங்கொண்ட வாலிபரில் சிலர் நெறிதவறி, மேனாட்டு ஹிம்ஸை முறைகளைக் கையாளலாயினர். இது ஒரு புற மிருக்க, ஐரோப்பிய மகாயுத்தத்தில் உதவி செய்ததற்கு ஈடாக அரசியல் உரிமை கிடைக்குமென நம்மவர் அனைவரும் எண்ணியிருக்க, முடிவில் இலவுகாத்த கிளிபோல் ஆகநேர்ந்தது. குதிரை தூக்கிப்போட்டதுமல்லாமல், குளமும் பறித்தது என்பர். அதுபோல் மகா கொடிய ரௌலட்சட்டத்தைஅரசாங்கத்தார் உண்டாக்கினர். தேச மனைத்தும் ஒரு முகமாக அதனை எதிர்த்தும், அரசாங்கமோ சட்டை செய்யவில்லை. நள்ளிரவிலே அச்சட்டம் உதித்தது. அதனைக் கண்டிக்க வேண்டி, நாம் எல்லாரும் ஸத்தியாக்கிரகம் கொள்ளவேண்டும் என்று காந்தி மகான் சொன்னார். தேசமக்கள் ஏக மனதாக சத்தியாக்கிரகத் துறையில் இறங்கினார்கள். அச் சமயத்தில்தான் கோரமான பஞ்சாப் படுகொலை நிகழ்ந்தது.

நமது கபூர் கான் அச்சட்டத்தின் தீமைகளை எடுத்துக்காட்டி, எல்லைப்புறமெங்கும் பிரசாரம் செய்யலானார். அப்போது மகாத்மா காந்தியைப் பற்றி நன்கு அறிந்து கொள்ள அவருக்குச் சமயம் வாய்த்தது. சத்தியாக்கிரக லட்சியத்தையும், அவர் நன்கு உணரலானார். உயரிய அக் கொள்கையைப் பரப்பக் கருதி, அப்பிரதேச மெங்கும் அவர் சுற்றுப் பிரயாணம் செய்தார். பதினாயிரக்கணக்கான மக்கள் அவரைப் பின்பற்றினர். அவரது செல்வாக்கு வானுற ஓங்கி நின்றது. அதிகாரிகள் அது கண்டு வாளா இருப்பரோ? உடனே அதிகாரிகள் ராணுவச் சட்ட அமலில் இறங்கினார்கள்; உத்மான்ஸா கிராமவாசிகளிடம் இருந்த ஆயுதங்களை எல்லாம் பறித்தார்கள்; கபூர்கான் உள்பட 140 கான்களைக் காவல் கூடத்தில் பிடித்துப் போட்டார்கள்; முப்பதாயிரம் ரூபா அக்கிரா

மத்திற்கு அபராதமாக விதிக்கப்பட்டது. மூன்று நான்கு மாதம் கழிந்ததும், அத்தலைவர்கள் விடுதலை பெற்றார்கள்; என்றாலும், ராணுவச் சட்ட மிடுக்கினால் அக்கிராமம் நூறாயிரம் ரூபா நஷ்டம் அடையலாயிற்று. கிராமவாசிகள் பட்ட கஷ்ட நஷ்டமோ பகரும் தரம் அன்று.

## 6. சுயராஜ்ய தவம்

1919-ஆம் ஆண்டில் ஏற்பட்ட சத்யாக்ரகப் போரை ஒட்டி, 1920-ஆம் ஆண்டு ஒத்துழையாமைப் போர் கிளம் பிற்று அல்லவா? கிலாபத்துக்கு நேர்ந்த அநீதி அகலவும், சுயராஜ்யம் எய்தவுமே, காங்கிரஸ் மகாசபை ஒத்துழை யாப்போர் தொடங்கிற்று. அந்தப் போரில் கபூர் கான் கலந்து கொள்ளாமல் விலகிநிற்க இயலுமோ? அவர் தீவிரமாகப் பிரசாரம் புரிந்தார். உடனே அதிகாரிகள் 1922-ஆம் ஆண்டில் அவரைக் கைதுசெய்து, மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்தார்கள். அதனால் பிஷாவர் பக்கத்து ஜனங்கள் ஆத்திரம்கொள்ள நேர்ந்தது. கலகம் கிளம்புமோ என்றும் அதிகாரிகள் அஞ்சலானார்கள். எல்லாம் ஒரு நன்மைக்கே என்பர். அது போல் அவரது சிறைவாசம் கண்டு, எல்லைப்புற மக்களிடையே தேசாபிமானமும் ஊக்கமும் மிக ஓங்கி வளரலாயின. சிறையினின்று விடுதலை பெற்றபின், அப்துல் கபூர்கான் வாளாஇருக்கவில்லை. கான்பூரிலே காங்கிரஸ் மகாசபை கூடியது. அப்போது முதன்முதலாக அவர் காங்கிரஸ் மகாசபைக்கு வந்தார். அதுமுதல் இந்திய தேசீய இயக்கத்தில் அவருடைய பற்றும் ஆர்வமும் அதிகரிக்கலாயின. 1927-28-ஆம் ஆண்டிலே ஆப்கானிஸ்தானத்தில் கொந்தளிப்பு உண்டாயிற்று. அப்போது இலட்சுமணபுரிக்கு காந்தி போயிருந்தார். அதுசமயம் காந்தியை நமது எல்லைப்புற காந்தி கண்டுபேசி, சபர்மதி ரிஷியின் மகிமை

யை அறிந்துகொண்டார். பின்பு ஊர் சேர்ந்ததும், எல்லைப்புற மக்களினிடையே கல்வியைப் பரப்பவும், தீயவழக்கங்களைப் போக்கவும், நல்லுணர்ச்சி ஊட்டவும் அவர் பெரிதும் முயன்ருர்; அதற்காக ஒரு சங்கம் கண்டார். அச்சங்கத்தின் ஆதரவிலே 26 தேசியபாடசாலைகள் இப்போது நடந்துவருகின்றன; ஈராயிரம் மாணவர் கல்வி கற்றுவருகின்றனர்; தேசீய உயர் தரப் பள்ளிக்கூடம் ஒன்றும் செம்மையாக நடந்துவருகின்றது.

வரன்முறையாக மகாஜனங்களுக்கு ராஜீய ஞானமும் உணர்ச்சியும் ஊட்ட அவர் கருதினர். அதன் பயனுக "ஆப்கன் ஜிர்கா" எனும் மகாசபை காணப்பட்டது. அம்மகாசபைக்கு எல்லைப்புற மாகாணத்திலே பல இடங்களில் கிளைச் சபைகள் இருக்கின்றன. பரிபூரண சுயராஜ்யம் அடைய முயலுவதே அம் மகாசபையின் கோட்பாடு. நமது காங்கிரஸ் மகாசபையைப் போன்றது அம் மகாசபை. தேசீய உணர்ச்சி, வகுப்பு ஒற்றுமை, சமய சமரஸம், அஹிம்ஸை, இவைகளே அச்சபையின் நோக்கங்கள். அந்நோக்கங்களை, ஆங்கிலத்தில் (Red shirts) எனப்படும் சேஞ்சீலேச் சேவகர் எங்கும் பரப்பிவருகிருர்கள். அவர்கள் அனைவரும் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் சிவப்பு ஆடையே தரித்திருப்பர். அச்சேவகர் ஒரு நூருயிரவர் என அறியக்கிடக்கின்றது. ஆண்டவனது அடியார், மானிடரின் தொண்டர் என்றும் அச்சேவகரை அழைக்கவேண்டும்.

அவர்களைப் போன்ற வீரபுருஷர்களையும், பலசாலிகளையும் எங்கும் காண்பது அரிது. அஹிம்ஸை என்பது எளியாரின், கோழைகளின் ஆயுதம் ஆகாது, ஆனல் ஆண்மையும் ஆற்றலும் படைத்த பெருமக்களின் ஆயுதமே ஆகும் என்று காந்திமகான் அடிக்கடி கூறுவார். அதற்கு நமது வீரப்பட்டாணியரே சான்று. கோபம்

கொண்டு விடின், வாளை உருவி உருமும் பான்மைவாய்ந்த பட்டாணியர், கபூர்கானது முயற்சியினால் அஹிம்ஸையை ஆயுதமாகக்கொண்டு துலங்குகின்றனர். ஒறுத்தார்க்கு ஒரு நாளே இன்பம், பொறுத்தார்க்கோ பொன்றும் துணையும் புகழ் என்றனர் மேலோர். காந்தியின் அஹிம்ஸா தத்துவமோ இன்னும் உயர்வுடையது. நம்மை அடித்த ஒருவன்மீது நாம் கோபம்கொள்ளாமல், அப்பா, உன் கை நோகுமே என்று சொல்லவேண்டும்.

## 7. பிஷாவர் அமளி

ஆண்மையும் ஆற்றலும்படைத்த பட்டாணியர் கொடுந்துன்பம் இழைக்கப்பட்டபொழுதும், அஹிம்ஸையே பூண்டு சாந்தமாக இருக்கத் தலைப்பட்டுளர். இது ஆச்சரியம் அல்லவா? இதற்கு ஓர் உதாரணம் கூறுவோம். 1920-21-ம் ஆண்டு முதலே எல்லைப்புறமக்கள் காங்கிரஸில் பற்றுக்கொள்ளலானார்கள். ஆனால் அப்போதோ பெரிய நகரங்களில்தான் காங்கிரஸ் உணர்ச்சி பரவியிருந்தது; கிராம மகாஜனங்களிடம் பரவி இருக்கவில்லை. 1929-ஆம் ஆண்டிலே லாகூர் நகரில் காங்கிரஸ் மகாசபை நடைபெற்றது. அக் காங்கிரஸுக்கு எல்லைப்புற மக்களில் பலர் வந்திருந்தனர். பரிபூரண சுயராஜ்யத் தீர்மானமும் அஹிம்ஸைக் கொள்கையும் அவர்களின் மனத்தில் பசுமரத் தாணிபோல் பதிந்தன. ஊர் சென்றதும், அவர்கள் காங்கிரஸ் வேலையில் மிக மும்முரமாக முனைந்தார்கள். செஞ்சிலைச் சேவகர் கிராமந்தோறும் சென்று, காங்கிரஸ் கொள்கையைப் பரப்பாநின்றனர். எல்லைப்புறமெங்கும் காங்கிரஸ் மயமாகிட்டது. இவ்வளவுக்கும் மூலபுருஷர் நமது கான் அப்துல் கபூர் கானே.

போன 1930-ஆம் ஆண்டு மார்ச்சுமாதம் மீண்டும் மகாத்மா காந்தி சத்தியாக்கிரகப் போர் தொடங்கினர்.

பிஷாவர் நகரும் அதில் ஈடுபட்டது. கள்ளுக் கடைகளை மறியல்செய்யத் தலைவர்கள் ஏற்பாடு செய்தனர். ஏப்ரல் 23-ந்தேதி மறியல் துவங்கும் என்று அதற்கு முன்தினம் ஒரு கூட்டத்திலே தலைவர்கள் அறிவித்தார்கள். எங்கும் அடக்குமுறை கையாளப்பட்டதுபோல், பிஷாவர் நகரி லும் கையாளப்படலாயிற்று. 23-ந்தேதி இரவில் தலைவர் களில் பலரை அதிகாரிகள் கைதுசெய்தார்கள். மறு தினம் காலையிலே நகரெங்கும் கடைகள் மூடப்பட்டன. மறியல் தொண்டர்கள் தங்கள் கடமையை ஆற்றப் புறப் பட்டனர். அந்தத் தொண்டர்களை ஆசீர்வதித்து அனுப்ப வீதியிலே ஜனங்கள் கூடியிருந்தார்கள். இதற்குள் இன் னும் இரு தலைவர்களைக் கைதுசெய்ய வாரண்டு வந்தது. அதுகண்டதும், அந்த இரு தலைவர்களும் போலீஸாருடன் சென்றனர். மோட்டார் வண்டியிலே அவர்களை போலீ ஸார் ஏற்றிச் செல்லுகையில், சக்கரத்தின் ரப்பர் குழாய் கிழிந்துவிட்டது. உடனே தலைவர்கள் இறங்கி நடந்து சென்றனர். ஜனங்கள் ஜே கோஷம் செய்துகொண்டு உடன் போனார்கள். இரு தலைவர்களும் போலீஸ் ஸ்டேஷ னுக்குள் சென்றதும், வந்த ஜனக் கூட்டம் கலையத் தலைப் பட்டது. கலையும்பொழுது "புரட்சி ஓங்குக" என்று ஜனங்கள் ஆரவாரம் செய்தார்கள். இதற்கு இடையில் பீரங்கி தாங்கிய கவசம் பூண்ட மோட்டார் வண்டிகள் வந்தன. ஒன்று, ஜனக்கூட்டத்தினிடையே வெகு வேக மாய்ச் செல்ல, சிலர் நசுக்குண்டு மாண்டு போயினர்; உடனே ஜனங்கள் கல்லையும் கட்டியையும் வாரிவீசினராம். அதனால் மோட்டார் பீரங்கி சுடத் தொடங்கிற்று. பலர் காயமுண்டு கீழே விழுந்தனர். பின்பு சிலதினங்கள் வரை யில் பிஷாவர் நகரில் ராணுவ ஆட்சியே நடந்தது வந்தது.

## 8. சாந்த சொரூபம்

அப்துல் கபூர்கானது செஞ்சிலைச் சேவகர் இருந்த காரியாலயத்துக்கு டிப்டி கமிஷனர் எனும் அதிகாரி போனார். மாடியில் இருந்த அச்சேவகரைக் கீழேபோகும் படியும், உடைகளைக் கழற்றும்படியும், அவர் கட்டளை இட்டார். "எங்கள் தலைவர் சொன்னால், கீழே போவோம் உயிர் போயினும் உடைகளைக் கழற்றோம்," என்று அச் சேவகர் சொல்லினர். சேவகரின் தலைவர் வந்து, கீழே போங்கள் என்றார். அக்கணமே அன்னார் கீழே போயி னர். கீழே போகும் பொழுது, புரட்சி ஓங்குக என்று அவர்கள் சொன்னார்கள். கோஷம் செய்யக்கூடாது என்று அதிகாரி கூறினர். செஞ்சிலைச் சேவகர் கேட்கவில்லை. அதி காரியோ உடனே தனது கைத்துப்பாக்கி கொண்டு ஷாம் பக்ஷ் எனும் சேவகனது மார்பைத் தொட்டு, உடை யைக் கழற்று என்றார். தனது உயிர்போயினும் பட்டாணி யன் தனது கால் சராயைக் கழற்றான்; உடனே அந்த அதி காரி தனது முஷ்டிகொண்டு குத்தினர்; இரண்டு ஸோல்ஜர் களோ தங்கள் துப்பாக்கிக் கட்டைகொண்டு அடித்தனர். மூர்ச்சையற்றுக் கீழே விழும் வரையில் அடி ஓயவில்லை. அங்கிலையில் ஷாம்பக்ஷின் ஆடையை ஸோல்ஜர்கள்கழற்றி எறிய, அவர் நிர்வாணி ஆனார். பெய்ஸ் மூகம்மது எனும் மற்றொரு தொண்டரையும் உடையைக் கழற்றும்படி அதி காரிகள் சொல்லினர். அத்தொண்டரோ மாட்டேன் என் றார். எட்டு ஒன்பது ஸோல்ஜர்கள் சேர்ந்து, பலவந்தமாக அவரது ஆடைகளை அவிழ்த்தெறிய முயன்றனர்; ஆயினும் அவர்களால் முடியவில்லை. பிறகு அவரது மண்டையில் அடித்து ஸோல்ஜர்கள் காயம் உண்டுபண்ணினர்; தவிர மூர்ச்சையற்றுப் போகும்வரையில் அவரைப் புடைத்தனர். சில தொண்டர்களை மாடியிலிருந்து ஸோல்ஜர்கள் கீழே

தூக்கி எறிந்தார்கள் ; சில தொண்டர்களை ஈட்டி கொண்டு குத்தி காயப்படுத்தினார்கள். தொண்டர்களின் தலைவரான முகம்மது கான் என்பாரை ஸோல்ஜர்கள் அடித்தது சொல்லி முடியாது; அவரது மேல்சட்டையை பலவந்தமாக எடுத்து எறிந்தார்கள் ; கால் சராயையும் கழற்ற முயன்றார்கள். அப்போது அவர் தனது வீட்டுக்கு ஓடி கைத்துப்பாக்கி எடுத்துவர முயன்றார். அருகே இருந்த தொண்டர் தளபதி, "அன்ப ! இவ்வளவு சீக்கிரம் உன் சாந்தம் பறந்து விட்டதோ? ஹிம்ஸை புரிய எண்ணுவையோ? காங்கிரஸ் கொள்கையின்படி அஹிம்ஸை கொண்டிருக்க உறுதி கொடுத்திருக்கின்றாயே" ! என்று சொன்னார். உடனே அவர் பரமசாந்த புருஷனாகி நின்றார். இந்நிலையிலும் அஹிம்ஸையை அவர்கள் கைவிடவில்லை.

பிஷாவர் அமளி சமயத்தில் கபூர்கான் மீண்டும் சிறைபுக நேர்ந்தது. அவரைத் தெய்வம்போல், எல்லைப் புறமக்கள் எண்ணலாயினர். அவர்களுக்கோ சிறிது மனம் பொறுக்கவில்லை. ஆயினும் ஹிம்ஸைவழியை அன்னார் கருதாமல், அஹிம்ஸையையே கடைப்பிடித்து நின்றனர். சண்டி வெருண்டால், காடு கொள்ளாது. இதை அதிகாரிகள் உணரவில்லை. மலைநாட்டு மக்களான ஆப்கானியர் என்போர், "எங்கள் கபூர்கானை விடுதலை செய்க, மகாத்மாவை விட்டு விடுக, ராஜீயச் சிறையாளர் அனைவரையும் விடுவித்து விடுக" என்று அதிகாரிகளைக் கேட்டனர். அதிகாரிகள் அதற்குக் காதுகொடுக்கவில்லை ; மற்று அடக்கு முறைகளைக் கையாண்டனர். கிராமங்களை ஆங்கில ஸோல்ஜர்கள் வளைந்து கொண்டனர்; மக்களின் போக்கு வரத்து தடுக்கப்பட்டது. அதன் மேல், அம்மக்கள் தற்காப்பின் நிமித்தம் ஆயுதம் எடுத்தனர். நெடுநாள் அவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் சண்டை நடந்தது. முடிவில் ஒருவாறு சமரஸம் ஏற்பட்டது.

## 9. கராச்சி நகரில் காட்சி

இந்த வருஷம் மார்ச்சு மாதக் கடைசியில் கராச்சி நகரிலே காங்கிரஸ் மகாசபை கூடிற்று. மார்ச்சு 27-ந் தேதியன்று கான் அப்துல் கபூர்கான் காங்கிரஸ் பந்தல் சேர்ந்தார். செஞ்சிலைச் சேவகர் நூற்றுவர் தேசிய கீதங்கள் பாடிக்கொண்டும், பாண்டு வாசித்துக்கொண்டும், அவர் முன்னே சென்றனர். கீதநாதமும் வாத்திய கோஷமும் பலரை பிரமிக்கச் செய்தன. செஞ்சிலைச் சேவகர் வீரம் விளங்க அணிவகுத்து அழகாக வந்தமை கண்டு சிலர் ஆனந்தம் அடைந்தனர்; சிலர் ஆச்சரியம் எய்தினர்; பலரோ ஒன்றும் அறியாமல் அச்சம் பூண்டனர்.

பகத்சிங், ராஜகுரு, சுகதேவ், மூவரும் தூக்கிலிடப் பட்டது கேட்டு அதற்கு முன்தினம் தொண்டர்களிலே பலருக்கு ஆத்திரம் பொங்கி நின்றது. அவர்களில் சிலர் கறுப்பு உடையும், சிலர் சிவந்த உடையும் தரித்து, "காந்தியே போ," என்று கூச்சல் போட்டனர். தவிர, செஞ்சிலைச் சேவகர் ஆயிரக்கணக்கில் வந்து, காங்கிரஸ் பந்தலைத் தாக்கி, அதனை வசம் செய்து கொள்வர் எனவும் ஒரு வதந்தி உலாவி நின்றது. இந் நிலையில் எல்லைப்புற காந்தியின் வருகையையும், அவரது சேவகரின் தோற்றத்தையும் கண்டு, வதந்தி மெய்யாகி விடுமோ என்று பலரும் திகைத்தனர்; சிலரோ அஞ்சி இங்கும் அங்கும் கூடி நின்றனர்.

"செஞ்சிலைச்சேவகர் எல்லைப்புற காந்தியின் சேவகர்; அன்னார் தம் தலைவருடன் காங்கிரஸைக் காணவே வந்துளர். முதல் தினம் காந்தியை அவமதித்த தொண்டருக்கும் அன்னாருக்கும் சம்பந்தம் கிடையாது," என்று அப்பால் புலப்பட்டது. அதன்மேல் அனைவரும் ஆறுதல் கொண்டனர். எனினும், இதற்கு இடையிலே காங்கிரஸ் பந்தலில் கூச்சலும் குழப்பமும் தோன்றலாயின. உண்மை

யை உணராமல், பலர் இங்கும் ஆங்கும் ஓடினர். முடிவில் சாந்தியும் அமைதியும் ஏற்பட்டன. காங்கிரஸ் தலைவர்களும் தொண்டர்களும் எல்லைப்புற காந்தியை இனிமையுடன் வரவேற்று உபசரித்தனர். அவரைத் தரிசிக்க வேண்டி, ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஆவல் கொண்டு நின்றதை விரித்துரைக்க இயலாது. சின்னேரம் வரையில், பல்லாயிரம் கண்கள் அவரையே நோக்கி நின்றன.

## 10. காந்தி வீரன்

சுயராஜ்யப் போரை நிறுத்திவைக்க மகாத்மா காந்தியும் லார்டு இர்வினும் ஒப்புக்கொண்டனர் அல்லவா? அப்போது இருவருக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதனை காங்கிரஸ் மகாசபை அங்கீகரித்தது. அது விஷயமாய் கபூர்கான் பேசினர். பிரசங்க மேடையில் அவர் ஏறியதும், "புரட்சி ஓங்குக" என்னும் ஆரவாரம் செவிடுபட்டது. பின்னர் அவர் பேசத்தொடங்கினர். அதன் சாரம்:—"எனக்கு உடல் சுகம் இல்லை; எனினும் மகாத்மாவின் ஆணையை எங்ஙனம் மீறுவது? ஆதலின் சிறிது பேசுகின்றேன். நான் ராஜீயவாதி அல்லன்; தேசசேவகரில் நான் ஒருவன். பண்டித மோதிலாலின் கீழ், ஒருமுறை ஊழியம் புரிந்தேன். இப்போது காந்தியின் வீரனுக இருக்கின்றேன். தளபதியின் ஆணைக்கு அடங்கி நடப்பதே என் கடமை; தேசத்துக்காக உயிரைக்கொடுக்கவும் நான் தயார். மகாத்மாவினிடம் பட்டாணியருக்கு முழு நம்பிக்கை உளது; அவரது இயக்கத்திலும் நம்பிக்கை உண்டு. சுயராஜ்யம் கிட்டும் வரையில் பட்டாணியர் மகாத்மாவின் பக்கபலமாக இருந்து உழைப்பர்.

"என்றும் இல்லாத புதிய உணர்ச்சியும் விழிப்பும் காந்தி மகான் ஊட்டியிருக்கிறுர். அவரது சொல்படி அனைவரும் நடத்தல் வேண்டும். பட்டாணியரோ அடிமைச்

சங்கிலி கண்டு அலுத்துப்போய் விட்டனர்; காந்தியின் உதவி கொண்டு, சுதந்திரம் அடைய அன்னவர் தீர்மானம் கொண்டுளர். இங்கே நீங்கள் வகுப்புச் சண்டை போடுகிறீர்கள். எல்லைப்புற மக்களின் நிலையைப் பாருங்கள். அவர்களுக்குள் அபிப்பிராய பேதம் உண்டு. என்ருலும், எதிரியைக் கண்டவிடத்து அம்மக்கள் தங்கள் பிணக்கை விடுத்து, ஒரு மனங்கொண்டு நிற்பர். அங்ஙனமே இந்தியரும் தங்கள் பிணக்கைவிடுத்து தேசீயநலத்தை நாடி, ஒன்றுபடுவார்களாக!''

## 11. எல்லைப்புற உண்மை

வட மேற்கு எல்லைப்புற விஷயத்தில் கராச்சி காங்கிரஸ் செய்த தீர்மானம் இது :—"எல்லைப்புற மக்கள் சுகமே வாழவேண்டும் என்று காங்கிரஸ் கருதவில்லை என்பதாக அங்கே பிரசாரம் நடக்கிறதாம். அதனுல் காங்கிரசின்மீது அம்மக்கள் சந்தேகம் கொள்ளக் கூடும். அச் சந்தேகத்தைப் போக்க வழிதேடுதல் அவசியம். ஆதலின், இந்தியாவின் இதர மாகாணங்கள் அடைவதைப் போன்ற அரசியல் அமைப்பு எல்லைப்புற மாகாணத்திலும் ஏற்படல் வேண்டும். இதுவே காங்கிரஸ் மகா சபையின் திடமான தீர்மானம்''. பண்டித ஜாவேரிலால் இத்தீர்மானத்தைப் பிரேரித்தார். கான் அப்துல் கபூர்கான் ஆதரித்துப் பேசினுர்; பேசியதின் சாரம் ஈதாகும்:—

"எல்லைப்புறத்தில் என்ன நடக்கிறது, அதன் நிலைமை யாது, என்று இந்தியர் அறிந்துகொள்ளக் கூடவில்லை; அறிந்துகொள்ளாவண்ணம் நமது அரசாங்கம் செய்து வந்துளது. இந்தியாவின்மீது ருஷியா படை கொண்டு வரும் என்று அந்நாளில் ஆங்கிலேயர் அஞ்சிக்கிடந்தனர். அதற்காக ஆங்கிலேயர் வகுத்த தற்காப்பான அரண் வகைகள் மூன்று ஆகும். ஒன்று, ஆப்கானிஸ்தானத்

துடன் நேசமாக இருந்தது; இன்னொன்று, ஆப்கானிஸ்தானத்துக்கு இப்பால் சுயேச்சையான பிரதேசமொன்றை ஏற்படுத்தியது; மூன்றாவது, எல்லைப்புற மாகாணம் என ஒரு மாகாணம் கண்டு, அதனை மிடுக்காக ஆண்டது. ருஷியாவினால் இனி ஆபத்து இல்லை என்று கண்டதும், சுயேச்சைப் பிரதேசத்தை அரசாங்கம் கைக்கொண்டது.

"அவ்விதம் வசமான பிரதேசத்தின் மக்களும் சரி, எல்லைப்புறவாசிகளான மக்களும் சரி, இந்தியாவின் ஓர் அங்கம் ஆவர். போன ஆண்டிலே வாஸிர் எனும் ஜாதியாருக்கும் அரசாங்கத்துக்கும் போர்மூண்டது உண்மையே. அதன் காரணம் யாது? கடந்த வருஷம் ஏப்ரல் மாதம் பிஷாவர் நகரில் அடக்குமுறை தாண்டவம் ஆடிற்று; பல தலைவர்கள் சிறையில் போடப்பட்டனர்; கொடுமைகள் இழைக்கப்பட்டன. இவை கண்டு வாஸிர் என்போர் மனம் பொறுக்கவில்லை; ஆதலின் காந்தியையும் ராஜீயச் சிறையாளரையும் விடுவிக்கவேண்டும் என்று அவர்கள் கேட்டார்கள். அதிகாரிகள் அதற்கு இணங்கவில்லை. மற்று, அம்மக்களின் வீடுகள் படையெடுக்கப்பட்டன; அவர்கள் வாசஸ்தலங்களின்மீது விமானங்களிலிருந்து வெடிகுண்டுகள் போடப்பட்டன. அதன்மேல் தற்காப்பின் நிமித்தம் அம்மக்கள் ஆங்கிலேயருடன் போருக்கு எழுந்தனர். சீக்கியரும் ஹிந்துக்களும் தொகையில் பெருத்திருப்பதனால் ஹிந்து ராஜ்யம் ஏற்படுத்த முயலுகின்றனர் என்று எங்களுக்கு அரசாங்கம் சொல்லுகின்றது; உங்களுக்கோ, ஆப்கானியர் படைகொண்டுவருவர் என்று உரைக்கின்றது. பிரித்து ஆளுதலே ஆங்கிலேயரின் அரிய ராஜதந்திரம். இந்தியாவோ நம் அனைவருக்கும் சொந்தம். பலவகை வகுப்பினரும் பரஸ்பரம் நம்பிக்கை கொண்டால் அல்லாமல், எத்தேசமும் முன்னேற்றம் அடைய முடியாது. ஒற்றுமை மிகவும் அவசியம்.

"ஆப்கானியராகிய நாங்கள் காந்தியிடம் முழு நம்பிக்கை கொண்டுள்ளோம். எங்கள்பால் மகாத்மாவுக்குப் பேரன்பு உளது. அதனால் நாங்கள் அவர் வசப்பட்டு நிற்கின்றோம். பண்டித ஜாவேரிலாலோ எங்களை நம்பியிருக்கிறார். அதனால் எங்கள் மனம் அவரிடம் குடிகொண்டிருக்கின்றது. மீண்டும் மகாத்மா தமது அறப்போர் தொடங்கின், எங்கள் சமர்த்தையும் தகுதியையும் அன்று உலகறியச் செய்வோம். எல்லைப்புற மாகாணத்துக்கு வர மகாத்மாவுக்கு அனுமதி கிடைக்கவில்லை. இதுபற்றி நாங்கள் பெரிதும் வருந்துகின்றோம். எங்கள் மாகாணத்துக்கு காந்தி வருவதில், இராஜப்பிரதிநிதி முதலில்சம்மதி கொடுத்தார்; அப்பாலோ எங்கள் மாகாண கவர்ன்மெண்டைக் கலந்து பேசிய பிற்பாடு மறுத்துவிட்டார். எல்லைப்புற மக்கள் என்னிடம் ஒரு செய்தி சொல்லியனுப்பியுளர். அது யாதெனில், எல்லைப்புறத்துக்கு மகாத்மா வந்து, எங்களுக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள சச்சரவைத் தீர்த்துவைக்கவேண்டும் என்பதாம். எல்லைப்புறத்திலே சாந்தியை நிலைநாட்ட அரசாங்கத்தினால் ஆகவில்லை. அன்பின் வடிவான மகாத்மாவினால் அது கைகூடும். ஆதலின் மகாத்மா வந்து எல்லைப்புறத் தொல்லையைத் தீர்த்து வைத்து, கணக்கற்ற வீண்செலவைத் தடுக்கலாம்."

பிஷாவர் நகரைச் சேர்ந்த பீர்பக்ஷ் என்பார் பேசியதின் சாரம்:—பிஷாவர் சம்பவம் கண்டு ஆப்கானியர் மனம் சகிக்கவில்லை. அவர்களின் கோரிக்கையை அரசாங்கம் அசட்டை செய்துவிட்டது. மேலும், காஜ-ஒலி மைதானத்தை அரசாங்கம் பிடித்துக்கொண்டு, அம்மக்களின்மீது போர் தொடுக்கலாயிற்று. ஆப்கானியருக்கு யாதொரு பொருளும் கிடைக்காவண்ணம் நாலுபக்கமும் அரசாங்கத்தார் வேலிபோட்டனர். மேலும், 26 லட்சம் ரூபா விலையுள்ள வெடிகுண்டுகள் ஆப்கானியர்மீது பிரயோ

கம் செய்யப்பட்டன. எல்லைப்புற மாகாணமோ வெடி மருந்துச்சாலை, ஆகவே அரசியல் திருத்தம் கூடாது என்று ஸர் ஜான் ஸைமன் சொன்னார். நான் உறுதி கூறுவது யாதெனில், நாங்கள் இந்தியாவின் மெய்யன்பராகத் துலங்கி, கோட்டைவாயிலைக் காக்கும் உயரிய வீரர் ஆவோம் என்பதேயாம். எங்கள் கோரிக்கையை எழுதித்தர, எங்கள் கையில் எழுதுகோல் தருவதாக பண்டித ஜாவேரிலால் சொன்னார். எல்லைப்புற மக்களாகிய நாங்களோ உங்களுக்கு எங்கள் தலையையே கொடுக்கிறோம். வேறு என்ன வேண்டும்?''

## 12. பம்பாய் விஜயம்

கான் அப்துல் கபூர்கான் 1931 ஏப்ரல் 4-ந் தேதியன்று பகல் பத்தரை மணிக்கு கராச்சியிலிருந்து கப்பல் மார்க்கம் பம்பாய் சேர்ந்தார். அச்சமயம் வெய்யில் மிகக் கடுமையாக இருந்தது. எனினும், ஆயிரக்கணக்கில் ஹிந்துக்களும் முகம்மதியரும் துறைமுகத்தில் கூடியிருந்தனர். அவரைக் கண்டதும் ''கான் அப்துல் கபூர்கான்கு ஜே!'' எனும் கோஷம் வானமளாவிற்று. காங்கிரஸ் தலைவர் அவருக்கு மாலையிட்டார்; பின்னர், அவரை நகர வீதி எங்கும் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். ஊர்வலத்திற்கு முன்னே பலவகை வாத்தியங்கள் கோஷித்தன. வீதியின் இருமருங்கும் ஆடவர், பெண்டிர், பாலர் விருத்தர் முதலியவரும் ஈக்களைப்போல் மொய்த்து நின்று ஆனந்த ஆரவாரஞ் செய்தனர்; சிலர் பூமாரி பொழிந்தனர்; சிலர் பன்னீர் வருஷித்தனர்; ஜும்மா மஸ்ஜித்தின் அருகே வந்ததும், அழகிய பந்தலில் அவரை நகர வியாபாரிகள் வரவேற்றார்கள்; உபாசாரப்பத்திரமும் படித்துக் கொடுத்தார்கள், ஊர்வலமாகச் செல்லுகையில் அவர் கால்நடையாகவே போனார். ஆஜானுபாகு ஆதலால்;

அவரை யாரும் நன்கு தரிசிக்க முடிந்தது. இருதினங்கள் அவர் பம்பாயில் தங்கியிருந்தார். ஓயாமல் ஒழியாமல் பலர் வந்து அவரைத் தரிசித்துச் சென்றனர். பம்பாயி லுள்ள பற்பல சபைகளும் அவருக்கு நல்வரவுப் பத்திரம் வாசித்துக் கொடுத்தன. அப்போது பற்பல கூட்டங் களில் அவர் அரிய சொற்பொழிவு ஆற்றினர். அவர் பேசி யதை இங்கே நமது தாய்மொழியில் தருவோம்.

## 13. மகாசபையின் பெருமை

கான் அப்துல் கபூர்கான் பேசியது:—"என்னை எல் லாரும் புகழ்கின்றனர்,போற்றுகின்றனர், துதிக்கின்றனர், அது கேட்டு, எனக்கு வெட்கம் உதிக்கின்றது. நான் பிர மாதமாக எதுவும் செய்து விடவில்லை. தொண்டின் தன் மையை, சேவகத்தின் நிலையை நாம் அறவே மறந்து விட் டோம்.தொண்டுபுரியவே நாம் பிறவி எடுத்தோம்; இதனை யும் நாம் மறந்தோம்; ஆதலினுல்தான் அற்ப ஊழியம் புரிந் தோரை நாம் வானமளாவத் துதிக்கின்றோம். இல்லை யானல், என்னை நீங்கள் புகழ்ந்துபேச யாது காரணம்? ஏனையோர் செய்ததை விட அதிகமாக நான் ஒன்றும் பண்ணிவிடவில்லை; என் கடமையையே நான் செய்தேன். அனைவரும் தமக்குரிய கடமையை நிறைவேற்றவேண்டும்.

"வடமேற்கு எல்லேப்புற மாகாணத்தைப்பற்றி ஒரு வார்த்தை; எல்லேப்புற மனிதர் தீமை பல புரிகின்றனர். கொடுமை இழைக்கின்றனர் என்று சொல்லப்படுகின்றது. இது சுத்தப் பொய். எல்லேப்புற மக்கள் அவ்வளவு தீயோர் அல்லர். அன்னர்மீது பழி சுமத்தக் காரணம் என்ன? காரணங்கள் இரண்டு ஆகும். ஒன்று, ஹிந்து மக்களுக்கு அச்சமூட்டி அவர்களின் மனத்தைப் பேதிப்ப தாம்; மற்றென்று முஸ்லிம்களை மனமொடியச்செய்வதாம். எல்லேப்புற முஸ்லிம்கள் தேசியப் போராட்டத்தில் கலந்து

கொள்ளவில்லை என்பதும் முழுப் பொய். சுயராஜ்யப் போரின் மிடுக்கை மிகவும் சகித்து நின்றோர் எல்லைப்புற முஸ்லிம்களே. அவர்களே மிகுந்த தியாகம் செய்தவர்கள்; அவர்களே அபாரமான கஷ்ட நஷ்டங்களை ஏற்றுக் கொண்டவர்கள். தேசியப் போரிலே முகமலர்ச்சியும் முழுமனதும் கொண்டு முன்னணியில் மார் தட்டி நின்றோர் அந்த முஸ்லிம்களே ஆவர். அவர்கள் உங்களது விரோதிகள் அல்லர்; மற்று, அவர்களோ உங்களதுஆப்த நண்பர். சமயம் வருங்கால், இதன் உண்மை புலப்படும்.

"காங்கிரஸ் மகா சபை ஹிந்துக்களின் சபையாம். அன்று, அன்று. அஃது இந்திய மக்களின் மகா சபை. பலவகை மக்களும் அச்சபையில் சேர்ந்துளர். அச்சபையின் நோக்கு என்ன? கருத்துத்தான் யாது? அது எதற்காகப் பாடுபடுகின்றது? பரிபூரண சுயராஜ்யமே அதன் லட்சியம். சுதந்திர சித்திக்கே அது உழைத்து வருகின்றது. நம்மவரிலே கோடிக்கணக்கான மக்கள் வயிறு காய்கின்றனர்; ஆடையின்றி வாடையால் வாடுகின்றனர்; வாழ்வில்லாச் சங்கடத்தில் உழலுகின்றனர். அன்னாரின் வயிறு குளிர, சுகம் பெருக, எண்ணம் உயர, இன்னல் தீர, அச்சபை முனைந்து நிற்கின்றது. இம்முயற்சியில் இந்திய முஸ்லிம்கள் நன்கு ஈடுபடவில்லை. இது அவமானமே. முஸ்லிம்கள் இந்தியர்கள் அன்றோ? இந்தியா தேசம் அவர்களின் தாயகம் இல்லையோ? இந்தியாவின் க்ஷேமலாபம் அவர்களின் க்ஷேமலாபம் ஆகாதோ? இந்தியா தேசம் சுயராஜ்யம் அடைகையில், அதன் பலனை அனுபவிக்க முஸ்லிம்கள் விரும்பாரோ? பிரிட்டிஷ் எஜமானர் போய்விடுகின்றனரே என்று முஸ்லிம்கள் மனம் நோவரோ? பிரிட்டிஷாருடன் முஸ்லிம்களும் கப்பலேறிச் சென்று விட முடியுமோ? செல்லின் இதர தேசங்கள் முஸ்லிம்களை வரவேற்குமோ? முஸ்லிம்களே! பங்கு என்றால்,

பரம ஆனந்தமும், பகுதி என்றால் பரம துக்கமும் கொள்ளுவதா? பாடுபட்டு உழைப்பது ஒருவர், அதன் பலனைப் புசிப்பது ஒருவரா? இது அடாது.

"முஸ்லிம்களே ! உங்கள் கடமையைச் செய்யுங்கள்; பின்னர், பலனில் பங்கு கொள்ளுங்கள், இதுவே நியாயம்; காலதேச வர்த்தமானத்தை நோக்கி நடவுங்கள்; வாளா இருக்க வேண்டாம்; சோம்பிக்கிடக்கவும் வேண்டாம். சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர். இது முக்காலும் உண்மை. உலக சரித்திரத்தை உற்று நோக்குங்கள். சுயராஜ்யப் போரில் நீங்கள் சேரினும் சேராவிடினும், இந்தியா சுயராஜ்யம் பெற்றுவிடும். அந்த சுயராஜ்யம் உங்களுக்கும் உண்டு. பாடுபடாமல் பலனை அனுபவிக்க வந்தால், நீங்கள் தலை குனிய நேரும்.

"காங்கிரஸ் மகா சபையை ஹிந்துக்களின் சபை என்று ஏன் சொல்லுகின்றீர்கள் ! முஸ்லிம்களே ! உங்கள் சபையாக அதனை ஆக்கிக்கொள்ளுங்கள். இதனை யார் தடுக்க முடியும்? எல்லாருக்கும் சுயராஜ்யம் கிட்டவே, அச்சபை பெருமுயற்சி புரிகின்றது. அடிமை வாழ்வை உதறி எறிய உங்களுக்கு இஷ்டம் இல்லையா? மனம் இல்லையா? ஆற்றல் இல்லையா? ஆண்மைதான் இல்லையா? உங்கள் பரம்பரைப் பெருமையை மறந்தீர்களோ? அடிமைகளை உயர்த்தவே, கைதூக்கிவிடவே நபிகள் நாயகம் பாடுபட்டார் அன்றோ? இது உங்களுக்குத் தெரியாதா? இன்று ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அடிமைகளாகக் கிடக்கவில்லையா? சுதந்திரத்துக்காகப் பாடுபடுதல் உங்களது பிறப்புரிமை; அஃதே சமயக்கோட்பாடும் ஆகும். ஆகவே சுதந்திர புருஷராக வாழவிரும்பின், கச்சை கட்டுங்கள், மார்தட்டி நில்லுங்கள், போரிலே குதியுங்கள்.

"பெரும்பாலான மக்கள், சிறுபாலான மக்கள் என்பது மாயமே. முஸ்லிம்கள் ஏழு கோடிதான், ஹிந்

துக்களோ இருபத்துமூன்று கோடியே என்று நீங்கள் சொல்வீர்கள்; ஹிந்துக்கள் முகம்மதியரை நசுக்கிவிடுவர் என்றும் உரைப்பீர்கள். நல்லது! தொகையும் அளவுமா பெரியன? அறிவு நலமும், ஆண்மையின் உயர்வுமே பெரியனவாம்? ஓர் உதாரணம். நாம் முப்பத்துமுக்கோடி மக்கள். அன்னியரான ஒரு சில ஆயிரவர் நம்மைக்கட்டி ஆளுகின்றனரே! தொகையும் எண்ணிக்கையுமா பெரியன! பாருங்கள். சிறுபாலாரைப் பெரும்பாலார் நசுக்கிவிடுவர் என்பது உண்மையானல், ஒரு சில ஆயிரவர் நம்மைக்கட்டியாளுதல் எங்ஙனம்! உள்ளநிலையை உணருங்கள், விழித்து எழுங்கள், வேலையில் முனையுங்கள்.

"மதத்துக்கு ஆபத்து வந்துவிட்டது, மதத்துக்கு ஆபத்து வந்துவிட்டது என்னும் கூச்சலில் அர்த்தமே கிடையாது. அக் கூச்சல் வெறுங் கூச்சலே. வகுப்புச் சண்டைகளுக்கும் சமயப் பிணக்குகளுக்கும் மூல புருஷர் யார்? ஆங்கிலேயர் நம்மை ஆளுகின்றனர்; கான்பூரில் என் கலகம் உண்டாயிற்று? கொள்ளையையும் கொலையையும் அவர்கள் அடக்க முடியாதா! முடியாது என்றால் ஆட்சியை நம்மிடம் அவர்கள் விட்டுவிடட்டும். நாம் பார்த்துக்கொள்ள முடியும். ஜாதி சமயச் சண்டைகளுக்கு நாம் பரிகாரம் தேடிக்கொள்வோம். மசூதியின் முன்னே மேளம் வாசித்தால் மதம் போய்விடுகிறதாம்; அரசமரத்தின் ஒரு கொம்பை ஒடித்தால், சமயம் சீரழிகின்றதாம். இதனல் மதம் போய்விடுமோ? போய்விடுமாயின் அது ஒரு மதம் ஆகுமா? அல்லது அதற்கு சிறப்புத்தான் உண்டா? வெறிபிடிக்கவும், இரத்த ஆசை கொள்ளவும் மதமா காரணம்? பரிசுத்த குர் ஆனை நான் படித்துளேன்; கீதையையும் வாசித்திருக்கிறேன். இரண்டும் அன்பே போதிக்கின்றன, அருளே ஊட்டுகின்றன. அன்பின் வழியை நாம் அறிந்திருக்கின்றோமா! அவ்வழியில் நடக்

கின்றோமா? பிஷாவர் நகரிலே ராணுவச் சட்டம் அமுலில் இருந்தது. மசூதிகளின் முன்னே சிப்பாய்களின் ஊதுகுழல்கள் எப்போதும் ஒலித்துக்கொண்டே இருந்தன. அவ்வேளை மதத்துக்கு ஆபத்து வந்துவிட்டது என்று ஆரேனும் கூச்சல் போட்டனரா? அல்லது மதத்தைக் காக்கத்தான் மார்தட்டி எழுந்தனரா? கண்டித்துப் பேசக்கூட ஒருவரும் துணியவில்லை. ஆங்கில ஸோல்ஜர் செய்யின் அது தகும்! ஒரு ஹிந்து செய்யின் இது தகாது. இதுவா மதம்? நம்மவரில் ஒருவரை ஒருவர்மீது தூண்டிவிடுவோன் மூன்றாவது மனிதன். இதனை அறிக!''

## 14. தமையன் தம்பியர்

மற்றோர் இடத்தில் கான் அப்துல் கபூர்கான் பேசியது:—முஸ்லிம்களே! என் வேண்டுகோளை எண்ணிப் பாருங்கள். தேச நலமே எனது மதம், எனது உயிர், எனது வாழ்வு! காங்கிரஸ் மகாசபை உங்களுடைய நலத்துக்காக இருக்கின்றது, உழைக்கின்றது. முஸல்மான்களாகிய நீங்களும் இச்சபையின் நலத்துக்காக உழைத்தல் வேண்டும். வைசியர் பெருமதி உடையோர், பட்டாணியரோ பெருவலி கொண்டோர்; இருவரும் ஒன்றுபட அரசாங்கம் விரும்பவில்லை. ஆப்கானியர் மிகக்கொடியர், அன்னாரின் நாற்றமே கூடாது என்று நூறு ஆண்டுகளுக்கு மேலாகப் பிரசாரம் நடந்துவருகின்றது. இதன் கருத்து யாது? ஆப்கானியரும் இந்தியரும் ஒன்றுபடாமல், பிரிந்து நிற்கவேண்டும் என்பதேயாம். காந்தியடிகள் வாழ்க! அவர் சத்தியாக்கிரக இயக்கம் தொடங்கினார். அதன் பயனாக, ஆப்கானியரான நாங்களும் இந்தியர்களான நீங்களும் ஒற்றுமைகொள்ளச் சமயம் வாய்த்தது. தவிர, இருவருக்கும் இடையே உள்ள வேலியும் தொலையத் தலைப்பட்டுள்ளது. ஆப்கானியர் அல்லது பட்டாணி

யர் என்போர் பிறவியிலேயே போர்வீரர்; இந்தியரோ இயற்கையிலேயே கூரிய மதிபடைத்தோர். இருவரும் ஒற்றுமை கொண்டுவிடின், இத்தேசத்திலே பிரிட்டிஷாரின் ஆதிக்கம் பறந்துபோம். இருவரையும் பிரித்துவைக்கும் முயற்சியை அவர்கள் இன்னும் கைவிடவில்லை. இந்தியாவெங்கும் போய்வர காந்திமகானுக்கு சுதந்திரம் உண்டு. அங்ஙனமிருக்க, எல்லைப்புற மாகாணத்தில் புகமுடியாமல் காந்தியைத் தடுத்திருப்பது ஏன்?

"அரசாங்கத்தின் கொள்கையை உற்றுநோக்குங்கள். எல்லைப்புறத்தைச் சீராக்குவதாகச் சொல்லி, ஆண்டுதோறும் அரசாங்கத்தார் கோடிக் கணக்கான ரூபாய் வாரி இறைக்கின்றனர். அதனால் நம் இந்தியாவின் பொக்கிஷம் வறண்டுபோகின்றது. அரசாங்கத்துக்கும் தங்களுக்கும் உள்ள தகராறில், காந்தியின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள ஆப்கானியர் தயாராக இருக்கின்றனர். எனினும் எல்லைப்புற மாகாணம் செல்ல, காந்திக்கு அனுமதி கிடையாது. பலங்கொண்டு வசஞ்செய்ய முயலின், பட்டாணியர் பதைபதைப்பர், வாளாவிரார்; கொடிய ஆயுதங்கள் கொண்டு அன்னாரை நசுக்கிவிட முடியாது. ஆயுத பலங்கொண்டு அடக்கிவிட முடியின், வெகு நாளைக்கு முன்பே ஆங்கிலேயர் அடக்கிப் போட்டிருப்பர். அன்பும் பரிவும் காட்டின், பட்டாணியரை எளிதில் வசம் செய்துவிடலாம்; உடனே அம்மக்கள் இந்தியாவின் கோட்டைவாயிலைக் காக்கும் உயர்வீரர் ஆவர்; உண்மை நண்பரும் ஆவர்; சுயராஜ்ய அரசாங்கத்தின் முதல்வேலை அதுவேயாம்.

"சுயராஜ்யம் என்றால் ஹிந்துக்களின் ராஜ்யம் என்று நமது எதிரிகள் சொல்லிவருகின்றார்கள். அஃது உண்மை என்றே வைத்துக்கொள்வோம். அன்னிய ஆட்சியில் இருப்பதைவிட, ஹிந்து ராஜ்யத்தில் இருப்பதே மேலாகும். இஃதே நான் எனது முஸ்லிம்களுக்குச் சொல்லும்

வார்த்தை. சுயராஜ்யம் இந்திய ராஜ்யமாக இருக்குமே அன்றி வேறன்று. என்றும் சுயராஜ்யப் போருக்கு எங்கள் பட்டாணியர் தயார். ஹிந்துக்கள் தங்கள் தம்பியரைப்போல் முஸ்லிம்களை மதிக்கவேண்டும்; முஸ்லிம்களோ தங்கள் தமையனைப்போல் ஹிந்துக்களை மதிக்க வேண்டும். இஃதே எனது வேண்டுகோள்.''

## 15. படேல் புகழ்தல்

ஸர்தார் படேலின் சோதரர் கனம் படேல் என்பார் இந்தியா சட்டசபையின் தலைவராக விளங்கினர். கபூர் கானையும் பிஷாவார் காங்கிரஸ்கமிட்டியையும் பற்றி கனம் படேல் புகழ்ந்து வரைந்திருப்பது இது:—

"பிஷாவர் நகரகாங்கிரஸ் கமிட்டி,காங்கிரஸ்மகாசபையின் ஓர் அங்கம். அஹிம்ஸையே காங்கிரஸ் மகா சபையின் வேலைத் திட்டத்துக்கு உயிர் நிலை என்று பிஷாவர் காங்கிரஸ் கமிட்டி துண்டுப் பிரசுரங்களின் மூலமும், பிரசங்க மேடையின் வாயிலாகவும் எப்போதும் போதித்து வந்துளது. கடுங்கோபம் மூட்டப்பட்டாலும் அஹிம்ஸையினின்றும் இம்மியளவும் நழுவக்கூடாது, என்று அக்கமிட்டி சதா வற்புறுத்தி வந்திருக்கிறது. கோபமே வேண்டாம் என்றும் விடாமல் வற்புறுத்தி வந்திருக்கிறது. கோபம் பொங்கக்கூடிய சந்தர்ப்பங்களிலும் எல்லைப்புற மக்கள் அஹிம்ஸையே தாங்கி நின்றனர்; சாந்தமான தீரங்கொண்டு துலங்கினர், பொறுமையுடன் பல கஷ்ட நஷ்டங்களைச் சகித்திருந்தனர். அவ்விதம் சாந்தமாக இருந்து, காங்கிரஸ் மகாசபையின் கௌரவத்தையும் மதிப்பையும அவர்கள் காத்துளர்.

"எல்லைப் புறத்திலே காங்கிரஸ் இயக்கத்தின் நாயகமாக விளங்கும் புருஷர் கான் அப்துல் கபூர்கானே; இவர், மகாத்மா காந்தியின் பரம சீடர்; கணப்பொழுதில்

கொதித்துக் கிளம்பும் சரீர பலமும் மனப் பாங்கும் கொண்ட பட்டாணிய வீரரைப் பரம சாந்த புருஷராக ஆக்கிய பெருமை கபூர்கானையே சேரும். இந்தியாவின் சுதந்திரத்துக்காக உயிரை வழங்கவும் பட்டாணியர் தயாராக இருக்கின்றனர். இதற்கும் மூல புருஷர் கபூர்கானே. அத்தகைய பெருமான் முன்னின்று நடத்தும் இயக்கம், ஆயுதந்தாங்கி எழும் புரட்சிக்கூட்டத்தினருடன் சம்பந்தம் கொள்ளுமோ ? கொள்ளாது என்பதே உறுதி. பிஷாவர் காங்கிரஸ் கமிட்டி, கலகத்துக்கு விதைபோடுவதாக அரசாங்கத்தார் சொன்னது அபவாதமே யாகும். மா பெருந்தலைவரான கபூர்கானையும் மாகாண மக்கள் அனைவரையும் அபவாதத்திற்கு ஆளாக்குதல் அழகோ ? எல்லைப்புற மாகாண காங்கிரஸ் கமிட்டியை சட்ட விரோதமான சங்கம் என்று சாற்றவே அத்தகைய அபவாதம் சொல்லப்பட்டது. இனி, அபேதவாதக் கொள்கைகளையும் சின்னங்களையும் பரப்ப பிஷாவர் காங்கிரஸ் கமிட்டி முயன்றது என்று அரசாங்கம் சாற்றியது பொய்யே''

கனம் படேல் தமது வார்த்தைகளை அளந்து பேசக்கூடியவர் ; முற்றும் உணராமல் ஒருவரை அவர் புகழார். உள்ள விஷயம் அனைத்தையும் கண்கூடாகக் கண்டபின்பே அவர் அவ்விதம் புகழுரை கூறியிருக்கிறார்.

## 16. முடிவுரை

அன்பர் பணிசெய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே

என்று அந்நாளில் தாயுமானவர் பாடிப்போனார். செல்வச் சீமான்களுக்கு அத்தகைய சிந்தை உதித்தல் அருமையினும் அருமை. எல்லைப்புற காந்தியாகத் துலங்கும் நமது கான் அப்துல் கபூர்கான் உயர் குடும்பத்தில் பிறந்தவர்; பெருஞ்செல்வம் படைத்தவர். இன்பத்தில் ஆழ்ந்து சுக

போகியாக அவர் தமது காலத்தைக் கழிக்கலாம்; அன்று அரசாங்கம் அளித்த அரும்பதவி வகித்து, உத்தியோகத்தில் உயர் பதம் பெற்று, உலகவாழ்க்கையை நடத்தலாம். எனினும், அவற்றில் அவர் மனம் குவியவில்லே, நடமாடும் கோயில்களான மானிடகோடிகளின் நலத்திலேயே அவர் நாட்டம் சென்றது. சுயநலத்தை அவர் வெறுத்தார்; பரநலத்திலேயே பரிவுகொண்டார்; பாங்காக உழைக்கலானுர். மெய்த்தொண்டு ஆற்ற முயலின், மெய்வருத்தம் நேரும், மனமது நோகும், கஷ்டநஷ்டங்கள் வந்து சாரும், கலக்கமும் உதிக்கும். என்றாலும், அவை பலவும் அவர் முன்னே தலேகாட்டவில்லே; வருவது வருக, அனேவருக்கும் வாழ்வளிக்க முயலுவோம், ஏழைகளுக்கு இனிமை செய்வோம், என்றே அவர் துணிவு பூண்டார். அது பற்றி, அவர் மும்முறை சிறைச்சாலே புக நேர்ந்தது. அதனே அவர் தவச் சாலேயாகவே மதித்தார். அவரது சீடர்களோ ஒரு நூருயிரவர் எனப் புலப்படுகின்றது. இன்னும் பலர் சேர்ந்துவருகின்றனர். அன்னவர் போர்க் குணமும், பேராண்மையும் படைத்த பெருவீரர்; வாளெடுத்து வரிசைகாட்டும் தீரபுருஷர் அத்தகையோரைத் திரட்டி, மறவழியில் இறங்கி, அவர் மாண்பு பெறக் கூடும். இஃது நெடுநாள் நிலேக்காது; கசப்பும் கடுமையுமே பெருகும். ஆதலின் அறவழியில் முயலா நிற்போம் என்று கருதி, அன்பு வழியில், அஹிம்ஸைத் துறையில், சாந்த மார்க்கத்தில் அவர் நம்பிக்கை கொண்டுளார். இளேயான் அடக்கமே அடக்கம் என்றனர் சமணமுனிவர். அங்ஙனமே ஆற்றலும் ஆண்மையும் கொண்டவனது சாந்தமே சாந்தம் எனப்படும். சூரனது சாந்தநிலேக்கும் ஈடு ஏது?

அனேவரும் ஆண்டவனது மக்கள், இஃதே எம்மதத்தினுக்கும் சம்மதமான உண்மை. மதங்காரணமாக மாறு கொள்ளுதலும் மற்போர் புரிதலும் மனக்கசப்புக் கொள்

ளுதலும், ஆண்டவனுக்குச் சம்மதம் ஆகா. அனைத்துயிர்களிடத்தும் அன்புகொள்ளுவதைவிட அரிய சன்மார்க்கம் வேறில்லை அல்லவா? இதனையே அவர் இந்து முஸ்லிம்களுக்கு வற்புறுத்துகிறார். தேசீய விஷயத்தில் சுயராஜ்ய மதம், சுதந்திர சமயம், ஒன்றையே கைக்கொள்ள வேண்டும் என்றும் அவர் போதிக்கிறார்; மாயத்தைக் கொண்டு மாயவேண்டாம் என்றும் எடுத்துக்காட்டுகிறார்.

பாரத பூமியின் கோட்டை வாயில் போன்ற எல்லைப்புறத்தில் அத்தகைய மகாபுருஷன் விளங்கி நிற்றல் நம்மவரின் பாக்கியமாகும். அவரது கீர்த்தியும் சீர்த்தியும் என்றும் நின்று நிலவும். அனைவரும் சுகம்பெற வேண்டி, உயிரை வழங்கவும் தயார் என்றுரைக்கும கபூர் காந்தி நீடூழி வாழ்க! பாரத பூமி முன்னம் பொன்னும்மணியும் கொழித்து நின்றது; பாலும் தேனும் எங்கும் வழிந்தோடின. இப்போதோ, எங்கும் வறுமைப்பிணி தாண்டவம் ஆடுகின்றது, அடிமைக்காற்று வீசுகின்றது, அடக்குமுறைகள் ஆர்ப்பரிக்கின்றன. இந்நிலை கண்டு பட்டாணியப் பெருமக்கள் தலை கொடுக்க முன் வந்திருகின்றனர்; சுதந்திர தேவியை இமய மலையின் சிகரத்தில் ஏற்றிவைக்க எண்ணுகின்றனர்; சுருங்கச் சொல்லின், பாரதத்தாயின் கண்ணீரைத் துடைக்க கங்கணம் கட்டிக்கொண்டுளர். பட்டாணியரின் பெருமையே பெருமை. இந்நிலைக்கு அவர்களை உயர்த்தியவர் எல்லைப்புற காந்தியே.

உண்மையாக உழைக்கையில் சோதனை பல ஏற்படும். அங்ஙனம் கபூர்கானுக்குப் பல சோதனைகள் ஏற்பட்டன. அவைகண்டு அவர் தளரவில்லை. அவரைக் கைது செய்யப்போகின்றனர் எனும் வதந்தியும் கிளம்பியது. அது கேட்டுப் பலர் திகைக்கலாயினர். எனினும் வதந்தி வதந்தியாகவே முடிந்துளது. எல்லைப்புற மக்களைச் சீராக்குவதில் அவர் முனைந்து நிற்கின்றார். இதற்கு இடையில்,

அவரது மெய்த் தொண்டரிலே சிலர் அடக்குமுறைக்கு இரையாயினர். அந்த அடக்கு முறையின் ஆர்ப்பாட்டமோ அளவை மிஞ்சிவிடும் என்று தென்பட்டது. உடனே அவர் புறப்பட்டுச் சென்று, மகாத்மா காந்தியைக் கண்டு, யோசனை பலவும் கேட்டுணர்ந்தார். அப்பால் எல்லைப்புற மாகாணத்தின் தலைமை அதிகாரி நமது கபூர்கானை வரவழைத்து நீண்ட நேரம் பேசலானார். இதன் விளைவாக அடக்குமுறையின் ஆர்ப்பரிப்பு அடங்கலாம். சத்தியத்திற்கு ஒருநாளும் அழிவு வராது; அஹிம்ஸையும் அரிய பலன் தராமல் போகாது. ஆதலின் சத்தியமும் அஹிம்ஸையுமே நமது ஆயுதங்களாம். அந்த ஆயுத பலங்கொண்டு, நாம் விரைவில் சுயராஜ்ய சித்தி பெறலாம்.

அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்,
அன்பு உடையார் என்பும் உரியர் பிறர்க்கு!

வந்தேமாதரம்!



"சுயராஜ்ய பேரிகை"

| | | | | |
|---|---|---|---|---|
| மலர் 1 | பகத்சிங் (ஐந்தாம் பதிப்பு) | 0 | 1 | 0 |
| ,, 2 | கான்பூர் கலகம் (இரண்டாம் பதிப்பு) | 0 | 1 | 0 |
| ,, 3 | எல்லைப்புற காந்தி (இரண்டாம் பதிப்பு) | 0 | 1 | 0 |
| ,, 4 | காங்கிரஸ்சரித்திரம் (இரண்டாம்பதிப்பு) | 0 | 1 | 0 |
| ,, 5 | பாரத ஜோதி | 0 | 1 | 0 |
| ,, 6 | இந்தியக் கடன் சுமை | 0 | 1 | 0 |

இனி மாதந்தோறும் மூன்று மலர்கள் வெளிவரும்.

*சரித்திர நூல்கள்*

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | சிவாஜி (சித்திரப்படங்களுடன் | 0 | 15 | 0 |
| 2 | பிரதாப சிம்மன் ,, | 0 | 7 | 0 |
| 3 | இராஜபுத்திர விஜயம் ,, | 0 | 15 | 0 |

கிடைக்குமிடம்:— வீர விஜயாலயம்,
32, ஐயப்ப செட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

இரண்டாம் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; 29—7—31.

PRINTED AT THE KESARI PRINTING WORKS, MADRAS.

## அன்பர்களுக்கு அறிக்கை

"சுயராஜ்ய பேரிகை" மலர் ஒவ்வொன்றும் ஓரணு விலை. ஒரு பிரதி வேண்டுவோர் ஒன்றரை அணுவுக்குத் தபால்பில்லை அனுப்பவேண்டும். ஒவ்வோர் ஊரிலும் ஏஜண்டுகள் தேவை. தக்க கமிஷன் கொடுப்போம். ஏஜண்டாக இருக்க விரும்புவோர் நமக்கு உடனே எழுதுவாராக. தற்சமயம் உள்ள ஏஜண்டுகளின் விவரம்:—

1. கோயமுத்தூர்:—ஸ்ரீ. P. S. G. வீரபத்திரன், 8-231, லிங்கப்ப செட்டி பஜார் சந்து.
2. கூடலூர்:—ஸ்ரீ:V. ராமச்சந்திரன், 209,A, நேபியர் ரஸ்தா.
3. மேட்டுப்பாளையம் — ஸ்ரீ. சவுடே கவுடர், வியாபாரி.
4. குளித்தலை:—ஸ்ரீ. எஸ். ராமசேஷன், நியூஸ் ஏஜண்டு.
5. நாகப்பட்டனம்:—ஸ்ரீ A. வேங்கடராமன், நியூஸ் ஏஜண்டு.
6. கும்பகோணம்:—ஸ்ரீ. துரை, காளியமர்த்தன் கதர் ஸ்டோர்.
7. நாமக்கல்:—ஸ்ரீ. எஸ். ராமசாமி, தேசீய பாடசாலை.
8. தர்மபுரி:—ஆனந்தா ஹால், நியூஸ் ஏஜண்டு.
9. தாராபுரம்:—ஸ்ரீ. வடிவேலுப்பிள்ளை, கமிஷன் ஏஜண்டு.
10. தூத்துக்குடி:—ஸ்ரீ. S. பிரமநாயகம் பிள்ளை,' ஜவுளி வியாபாரம், கிரேட் காட்டன் தெருவு.
11. திருநெல்வேலி:—ஸ்ரீ. எஸ். முத்தையா பிள்ளை, புத்தக வியாபாரம்.
12. திருச்செந்தூர்:—ஸ்ரீ. T. ஐயாப்பிள்ளை, புத்தக வியாபாரம்.
13. கோட்டாறு:—ஸ்ரீ. K. சுப்பைய பண்டாரம், கமிஷன் ஏஜண்டு.
14. தென்காசி:—ஸ்ரீ. S. ராமசுவாமி, கதர் ஸ்டோர்.
15. கிருஷ்ணகிரி:—ஸ்ரீ. K. S. இலட்சுமணராவ், நியூஸ் ஏஜண்டு.
16. மன்னார்குடி:—ஸ்ரீ. M. S. ஈசுவரன், தொண்டர் தலைவர்.
17. கொழும்பு:—ஸ்ரீ. A. ஜோஸப் பர்னாந்தோ, பாங்க்ஷால் தெரு, கொழும்பு.
18. ஆரணி:—ஸ்ரீ A. V. கன்னைய நாயுடு, நியூஸ் ஏஜண்டு.
19. கோபிசெட்டிபாளையம்:— ஸ்ரீ G. V. ராமகிருஷ்ணன், மானேஜர், நேஷனல் ஸ்டோர்.
20. பெங்களூர் தண்டு.—ஸ்ரீ V. அப்பாவு செட்டி, புத்தக வியாபாரம்.
21. வேலூர்:—ஸ்ரீ V. T. ராஜமாணிக்க முதலியார் தமிழ், நாடு ஏஜெண்டு.
22. சங்கரன்கோயில்:—ஸ்ரீ S. K. வேங்கடாசலம் ஐயர்,
23. காரைக்குடி:—ஸ்ரீ M. சிதம்பர தேசிகர், ஹிந்து ஏஜெண்டு.
24. கூனூர்:—ஸ்ரீ S. R. தங்கவேலு, காதி வஸ்திராலயம்.